# பாங்கில் ஷஹாத்தின் போது பெருவிரல் முத்தமிடுதல் சம்பந்தமான ஆய்வு

பரலேவிகள் இந்த மஸ்அலாவில் அல்லாமா ஷாமி (ரஹ்)

அல்லாமா தஹ்தாவி (ரஹ்) ஜலாலைன் ஆசிரியரின் கருத்தை முன்வைத்து பாங்கில் ஷஹாதின் போது பெருவிரல்களை முத்தமிடுவதை முஸ்தஹப்பு என்கின்றனர். இது குறித்து மேற்கூறப்பட்ட நூல்களை ஆராயும் போது பரலேவிகளுக்கு எதிராக இருப்பதைதான் காணமுடிகிறது.

இது சம்பந்தமாக ஹாஷியா இப்னு ஆபிதீன் மற்றும் ஹாஷியா தஹ்தாவி இரு நூல்களிலும் எடுத்தெழுதப்பட்டுள்ளது.

இதனைப் பற்றிய விரிவான பதிலை இன்ஷா அல்லாஹ் பிறகு பார்ப்போம்!

அடுத்து ஸாஹிப் ஜலாலைன் கருத்தின் எதார்த்த நிலை: என்னவெனில் அல்லாமா ஜலாலுத்தீன் (ரஹ்) அவர்கள் தப்ஸீர் ஜலாலைனில் எங்கும் இது குறித்து கூறவில்லை.எனினும் தப்ஸீர் ஜலாலைனிலே ஸூரா அஹ்ஜாபின்

56 வது வசனத்தின் ஓரக்குறிப்பிலே இதனைப் பற்றி எழுதப்பட்டுள்ளது.

முதல் விஷயம் என்னவெனில்

தப்ஸீர் ஜலாலைனின் ஓரக்குறிப்பானது ஏறத்தாழ முப்பது திருக்குர்ஆன் விளக்கவுரை நூல்களிலிருந்து எடுத்தெழுதப்பட்டுப்பட்டுள்ளது.

எனினும் ஓரக்குறிப்பை எழுதியவர் யார்? என்பதானது எவரும் அறிந்திருக்கவில்லை.அதுமட்டுமின்றி அதிகமான இடங்களில் பலமான, பலமற்றவிஷயங்கள்,அறிவிப்பாளர் தொடர் அற்ற விஷயங்கள் நிறைந்து உள்ளது.எனினும் ஓரக்குறிப்பின் இறுதியில் இந்த மஸ்அலாவானது தப்ஸீர் ரூஹுல் பயானிடமிருந்து எடுத்தெழுதியதாக சுட்டிகாட்டப்பட்டுள்ளது.தப்ஸீர் ரூஹுல் பயானில் ஷைக் இஸ்மாயில் ஹக்கி ஃ பரூஸி ரஹ் அவர்கள் முஸ்தஹப்பு என்பதாக இரு நூல்களை முன்வைத்து எடுத்தெழுதியுள்ளார்.மேலும் அந்த இரு நூல்களிலும் இது சம்பந்தமான அறிவிப்புகள் இட்டுகட்டப்பட்டது என்பதையும் எடுத்தெழுதியுள்ளார்.எனினும் இறுதியில் அன்னார் அவர்கள் அதனை முஸ்தஹப்பு என்பதாக சுட்டிகாட்டுகிறார்.

முதலில் பிக்ஹ் நூல்களில் உள்ள வாக்கியங்களைப் பார்ப்போம்!

இப்னு ஆபிதீன் ரஹ் அவர்களின் ஹாஷியாவான ( ஓரக்குறிப்பு) வாசகம்: يستحب ان يقال عند سماع الاولى من الشهادة صل الله عليك يارسول الله و عند الثانية منها قرت عيني بك يا رسول الله ثم يقول اللهم متعني بالسمع و البصر بعد وضع ظفر الابهامين على العينين فانه عليه السلام يكون قائدا به الى الجنة كذا كنز العباد

கருத்து: பாங்கில் முதல் ஷஹாதத்தை செவிமடுக்கும் போது "ஸல்லல்லாஹு அலைக யா ரஸூலுல்லாஹ்" என்றும் இரண்டாவது ஷாஹத்தின் போது " கர்ரத்து அய்னி பிக யாரசூலுல்லாஹ்" ( உங்களின் பொருட்டால் எனது கண்கள் குளிர்ச்சி அடைந்துவிட்டது) பிறகு அவர் கண்களின் மீது இரு பெருவிரல்களின் நகத்தை வைத்தவாறு அல்லாஹும்ம மத்தி؛னி பிஸ்ஸம்யி வல் பஸரி

(யா அல்லாஹ் பார்வை ,செவியைக் கொண்டு சுகத்தை எனக்கு அருள்வாயாக!) என்பதை கூறுவார் இதன்காரணமாக நபி ( ஸல்) அவர்கள் அவரை சுவனத்தின் பால் அழைத்து செல்வார்கள்.இவ்வாறு கன்ஜுல் இபாதில்,பதாவா கஹஸ்தானி பதாவா ஸுபிய்யாவில் வருகிறது.

பிர்தவ்ஸ் நூலில் வருகிற ஹதீஸ்

**من قبل ظفري ابهاميه عند سماع اشهد ان محمدا رسول الله فى الاذان انا قائده و مدخله فى صفوف الجنة و تمامه فى حواشى للرملى عن المقاصد الحسنة للسخاوي ذكر الجراحي و اطال ثم قال و لم يصح فى المرفوع من كل هذا شيئ (حاشية ابن عابدين**

**كتاب الصلوة باب الاذان )**

கருத்து: பாங்கில் அஷ்ஹது

முஹம்மத் ரஸூலுல்லாஹ் என்பதை செவிமடுக்கும் போது தனது பெருவிரல்களின் நகத்தை முத்தமிடுவாரோ அவரை நான் சுவனத்தின் அணிகளிலே அழைத்து செல்வேன்.நுழைவிப்பேன்.

ஸகாவி ( ரஹ்) அவர்களின் மகாஸிதுல் ஹஸனாவியிலிருந்து ரமலிக்குரிய பஹ்ரின் ஹவாஷியில் முழுமையாக வந்துள்ளது. இதனை ஜர்ராஹி அவர்கள் நீண்ட ஆய்வை குறிப்பிடுகிறார்.பிறகு அவர் கூறுகிறார்:

இது சம்பந்தமான எந்த ஆதாரப்பூர்வமான மர்؛பூஆவான ( நபி ( ஸல்) அவர்கள் வரை) ஹதீஸ் நிரூபணமாகவில்லை.(ஆதாரம்:ஹாஷியா இப்னு ஆபிதீன்

கிதாபுஸ்ஸலாத் பாடம்: அதான் )

ஹாஷியா தஹ்தாவி அலல் மராகில் ஃபலாஹ் வருகிற வாசகம் :

ذكر القهستاني عن كنز العباد انه يستحب ان يقول عند سماع الاولى من الشهادتين للنبي صلى الله عليك يا رسول الله و عند سماع الثانية قرت عيني بك يا رسول الله اللهم متعني بالسمع و البصر بعد وضع ابهاميه على عينيه فانه صلى الله عليه و سلم يكون قائدا به فى الجنة و ذكر الديلمى فى الفردوس من حديث ابى بكر الصديق رضي الله عنه من مسح العين بباطن انملة السبابتين بعد تقبيلهما عند قول المؤذن اشهد ان محمدا رسول الله و قال اشهد ان محمدا رسول الله. م رضيت بالله ربا و بالاسلام وبمحمدٍ صلى الله عليہ وسلم نبيّاً ” حلت لہ شفاعتی كذا روى عن الخضر علىہ و بمثلہ ىعمل فى الفضائل

கருத்து: கன்ஜுல் இபாத் என்ற நூலில் உள்ளதை கஹஸ்தானி ( ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:

பாங்கில் முதல் ஷஹாதத்தை செவிமடுக்கும் போது " ஸல்லல்லாஹு அலைக யா ரஸூலுல்லாஹ்" என்றும் இரண்டாவது ஷாஹத்தின் போது "கர்ரத்து அய்னி பிக யாரசூலுல்லாஹ்" ( உங்களின் பொருட்டால் எனது கண்கள் குளிர்ச்சி அடைந்துவிட்டது) பிறகு அவர் கண்களின் மீது இரு பெருவிரல்களின் நகத்தை வைத்தவாறு அல்லாஹும்ம மத்திஃனி பிஸ்ஸம்யி வல் பஸரி

(யா அல்லாஹ் பார்வை ,செவியைக் கொண்டு சுகத்தை எனக்கு அருள்வாயாக!) என்பதை கூறுவார். இதன்காரணமாக நபி (ஸல்)

அவர்கள் அவரை சுவனத்தின் பால் அழைத்து செல்வார்கள்.

தைலமி ( ரஹ்) அவர்கள் " பிர்தவ்ஸில்" நூலில் அபூபக்கர் ( ரளி) அவர்களின் வாயிலாக மர்ஃபூவாக வருகிறது

"முஅத்தின் பாங்கில் அஷ்ஹது அன்ன முஹம்மதன் ரசூலுல்லாஹ்" என்று சொல்வதை செவிமடுக்கும் போது ஆட்காட்டி விரல்களை முத்தமிட்ட பிறகு அதனின் விரல்நுனியின் உட்புறத்தை கண்ணில் வைத்து தடவியவாறு

"ரளீது பில்லாஹி ரப்பா வபில் இஸ்லாமி தீனா வபி முஹம்மதி ரசூலா" என்று கூறுபவருக்கு எனது சிபாரிசானது கிடைத்துவிட்டது.இவ்வாறு ஹிள்ர் (அலை) அவர்களிடமிருந்தும் அறிவிக்கப்பட்டுள்ளது.இது போன்ற ஹதீஸ்களைக் கொண்டு அமல் செய்யலாம் (ஆதாரம் ஹாஷியத் தஹ்தாவி அலா மராகில் ஃபலாஹ் கிதாபுஸ்ஸலாத் பாபுல் அதான் )

தப்ஸீர் ஜலாலைனின் ஹாஷியா ஓரக்குறிப்பில் வரும் வாசகம் ரூஹுல் பயானிலிருந்து எடுத்தெழுதப்பட்டுள்ளது:

ثم ان للصلاة و التسليمات مواطن فمنها ان يصلي عند سماع اسمه الشريف فى الاذان قال القهستاني فى شرحه الكبير نقلا عن كنز العباد اعلم انه يستحب ان يقال عند : الاولى من الشهادة" صلى الله عليک يا رسول الله " ، وعند

سماع الثانية: " قرة عيني بک يا رسول الله " ، ثم يقال: اللهم متعني بالسمع

والبصر، بعد وضع ظفر الإبهامين على العينين؛ فإنه قاعدٌ له إلى الجنة

கருத்து:

நபியின் மீது ஸலவாத் மற்றும் ஸலாமிற்கு சில இடங்கள் உள்ளன அதில் ஒரு சந்தர்ப்பமானது பாங்கில் முதல் ஷஹாதத்தை செவிமடுக்கும் போது "ஸல்லல்லாஹு அலைக யா ரஸூலுல்லாஹ்" என்றும் இரண்டாவது ஷாஹத்தின் போது " குர்ரது அய்னி பிக யாரசூலுல்லாஹ்" ( உங்களின் பொருட்டால் எனது கண்கள் குளிர்ச்சி அடைந்துவிட்டது) பிறகு அவர் கண்களின் மீது இரு பெருவிரல்களின் நகத்தை வைத்தவாறு "அல்லாஹும்ம மத்தி ்ணி பிஸ்ஸம்யி வல் பஸரி"

(யா அல்லாஹ் பார்வை ,செவியைக் கொண்டு சுகத்தை எனக்கு அருள்வாயாக!) என்பதை கூறுவார் இதன்காரணமாக நபி ஸல் அவர்கள் அவரை சுவனத்தின் பால் அழைத்து செல்வார்கள். மேலும் நபி ஸல் அவர்கள் கூறினார்கள் .

وقال عليه السلام: " من سمِع إسمي في الأذان، فقبّل ظفري إبهاميه، ومسح على عينيه لم يهم أبداً " .

قال الإمام السخاوي في " المقاصد الحسنة :" إن هٰذا الحديث لم يصح في المرفوع؛ - والمرفوع من الحديث: هو ما أخبر الصحابي عن قول رسول الله صلى الله عليه وسلم -

وفي شرح اليماني ": ويكره تقبيل الظفرين، ووضعهما على العينين؛ لأنه لم يرد فيه، والذي ورد فيه ليس بصحيح " .

يقول الفقير: " قد صَحَّ من العلماء تجويزُ الأخذِ بالحديثِ الضعيف في العمليات، فكون الحديث المذكور غير مرفوع لا يستلزم ترک العمل بمضمونه، وقد أصاب القهستاني في القول باستحبابه، وكفانا الإمام المكي في كتابه؛ فإنه قد شهد الشيخ السهروردي في " عوارف المعارف " بوفور علمه وكثرة حفظه وقوة حاله، وقيل جميع ما أورده في كتابه " قوت القلوب " ، ملخصاً من الروح البيان . ولقد فصّلنا الكلامَ وأطنَبْنَاه؛ لأن بعضَ الناس ينازِعُ فيه؛ لقلة علمه " .

( حاشيةٌ مطبوعةٌ على تفسير الجلالين، سوره الأحزاب، رقم الآية : ٥٦، مكتبة البشرىٰ وص: ٣٥٧، قديمي ومنقولةٌ من تفسير روح البيان للشيخ ٣/ ٧٩،٨٠ إسماعيل حقي البروسي رحمه الله، سورة الأحزاب، رقم الآيه: ٥٦، ٧/ ٢٢٨، ٢٢٩،

مطبعة عثمانية)

கருத்து: எவர் எனது திருப்பெயரை பாங்கில் கேட்டு தனது பெருவிரல்களை முத்தமிட்டவாறு கண்ணில் ஒற்றிக்கொள்வாரோ அவருக்கும் எப்போதும் கவலையே அடையமாட்டார்.

இமாம் ஸகாவி ரஹ் அவர்கள் "மகாஸிதுல் ஹஸனா" என்ற நூலில் இந்த ஹதீஸ் மர்ஃபூவானது ஆதாரப்பூர்வமாக அறிவிக்கப்படவில்லை.(மர்ஃபூஃ என்பது நபித்தோழர் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிப்பதாகும்)

யமானியின் விளக்கவுரையிலே பெருவிரல்களின் நகங்களை கண்களில் ஒற்றியவாறு முத்தமிடுவது மக்ரூஹாகும்.ஏனெனில் இது குறித்து ஆதாரப்பூர்வமான ஹதீஸ் அறிவிக்கப்படவில்லை என வந்துள்ளது.

ஷைக் இஸ்மாயில் ஹக்கி ரஹ் அவர்கள் கூறுகிறார்கள்:

அமல்களில் பலகீனமான ஹதீஸ்களைக் கொண்டு அமல் செய்வதை மார்க்க அறிஞர்கள் சரிகாண்கின்றனர்.ஏனெனில் மேற்கூறப்பட்ட ஹதீஸானது மர்ஃபூவானதல்ல.எனினும் அதன் பேரில் அமலை விடுவது அவசியமாகாது.(அமல் செய்யலாம்)

மேலும் கஹஸ்தானி ரஹ் அவர்கள் அதனை முஸ்தஹப் என்பதாக அறிவித்துள்ளார்கள்.மேலும் இமாம் மக்கி ( ரஹ்) அவர்கள் அவரின் நூலில் இதனை அறிவித்திருப்பதும் நமக்கு போதுமானது.ஏனெனில் ஷைகு ஷஹரவர்தி (ரஹ்) அவர்களின் "அவாரிபுல் மஆரிபிலே" அன்னாரின் (இமாம் மக்கி) மனன சக்தி,நிறைந்த மார்க்க அறிவு, ஞாபகத்திறனை சான்றளித்துள்ளார்.

அன்னார் அவர்களது நூலான " குவ்வத்துல் குலூபில்" ரூஹுல் பயானிலிருந்து சுருக்கமாக கொண்டு வந்துள்ளார். இதனை குறித்து நீண்ட விளக்கத்தை நாம் அளித்துவிட்டோம்.ஏனெனில் அறிஞர்களில் சிலர் மார்க்க ஞானத்தின் குறைவின் காரணமாக இதில் கருத்து மோதல் செய்கின்றனர்.(ஆதாரம்:ஹாஷியா மத்பூஆ தப்ஸீருல் ஜலாலைன் ஸூரா அஹ்ஜாப் வ மன்கூலதுன் மின் தப்ஸீர் ரூஹுல் பயான் லிஷ்ஷைக் இஸ்மாயில் ஹக்கி (ரஹ்))

இனி விரிவான ஆய்வைப் பார்ப்போம்! கவனிக்கத்தக்க விஷயங்கள் *(1)*பாங்கு மற்றும் இகாமதில் பெருவிரலை முத்தமிட்டு கண்களில் ஒற்றிக்கொள்ளுதலின் தரம் என்ன*?*

*(2)*மேற்கூறப்பட்ட நூல்களில் முஸ்தஹப்பு என்பதன் காரணம் என்ன*?* பாங்கு மற்றும் இகாமதில் ஷஹாததின் போது பெருவிரலை முத்தமிட்டு கண்ணில் ஒற்றிக் கொள்ளுதலில் இறுதியான தீர்ப்பு இது சுன்னத்தான அமலும் அல்ல முஸ்தஹப்பான அமலும் அல்ல மாறாக பித்அத்தாகும்.

பிக்ஹ் நூல்களில் இந்த அமலை முஸ்தஹப்பு என்பதாக வந்துள்ளதில் இரு விஷயங்களை கவனிக்க வேண்டும்

*(1)*முஸ்தஹப்பு என்ற சொல்லிற்கு ஆதாரமாக எடுக்கப்பட்ட ஹதீஸின் தரம் என்ன*?*

எந்த ஹதீஸானது அந்த அமலிற்கு அடிப்படையாக உள்ளதோ ஒவ்வொரு நூல்களிலும் சிற்சில வார்த்தைகள் மாற்றத்துடன் வந்துள்ளது.

தைலமி அவர்கள் " பிர்தவ்ஸ்" என்ற நூலில் அபூபக்கர் ( ரளி) வாயிலாக கொண்டு வந்துள்ள ஹதீஸை ஹாஷியத் தஹ்தாவி அலல் மராகில் ஃபலாஹில் எடுத்தெழுத்தப்பட்டுள்ளது.

وذكر الديملي في الفردوس من حديث أبي بكر الصديق ص مرفوعاً ": مَن مسَح
العين بباطن أنملةِ السبابتين بعدَ تقبيلهما عند قول المؤذن " أشهد أن محمدًا
رسولُ اللہ " ، وقال: " أشهد أن محمداً عبدُه ورسولُہ، رضيت باللّٰہ رباً وبالإسلام
ديناً وبمحمدٍ ا نبيّاً " ، حلّتْ لہ شفاعَتِياه

கருத்து: முஅத்தின் பாங்கில் அஷ்ஹது அன்ன முஹம்மதன் ரசூலுல்லாஹ் என்று சொல்லும் பொழுதெல்லாம் செவிமடுக்கும் போது ஆட்காட்டி விரல்களை முத்தமிட்ட பிறகு அதனின் விரல்நுனியின் உட்புறத்தை கண்ணில் வைத்து தடவியவாறு "ரளீது பில்லாஹி ரப்பா வபில் இஸ்லாமி தீனா வபி முஹம்மதி ரசூலா" என்று கூறுபவருக்கு எனது சிபாரிசானது கிடைத்துவிட்டது.

இந்த அமலிற்கு அடிப்படையாக உள்ள மற்றொரு ஹதீஸை அல்லாமா தஹ்தாவி ( ரஹ்) சுட்டிகாட்டியுள்ளார்கள்: அல்லாமா ஸஹாவி ( ரஹ்) அவர்கள் இதனை முழுமையாக மகாஸிதுல் ஹஸனாவில் அந்த ஹதீஸை

கொண்டுவந்துள்ளார்கள். அதன் விபரம் خضر عليہ السلام: أنہ من قال حين يسمع المؤذن، يقول ": أشهد أن محمداً

رسولُ اللہ " مرحباً بحبيبي، وقرة عينيمحمد ا، ثم يُقبّل إبهاميہ ويجعلهما على

عينيہ، لم يرمَد

கருத்து: முஅத்தின் அஷ்ஹது அன்ன முஹம்மதன் என்று கூறுவதை கேட்டு "மர்ஹபன் பிஹபீபீ வ குர்ரத அய்னி முஹம்மதி" ( எனது நேசரை வரவேற்கிறேன் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் இரு கண்களும் குளுமை அடையட்டும்!) பிறகு இருபெருவிரல்களை முத்தமிட்டு அதனை கண்களில் ஒற்றி கொள்பவர் கவலையடைய மாட்டார்.

இதில் முதல் ஹதீஸ் குறித்து ஸகாவி (ரஹ்) அவர்கள் முல்லா அலி காரி (ரஹ்) அவர்கள் அல்லாமா தாஹிர் பட்னி ( ரஹ்) அவர்கள் அல்லாமா முஹம்மத் அமீர் கபீர் மாலிகி அவர்கள் அனைவரும் لا يصح (லா யஸிஹ்ஹு) என்கிறார்கள். இது இட்டுகட்டப்பட்டது என்பதாக தீர்ப்பு செய்துள்ளனர். المقاصد (الحسنة،) حرف الميم، رقم الحديث: ١٠١٩،ص: ٤٤٠، دارالكتب العلمية

( الموضوعات الكبرىٰ للقاري، حرف الميم، رقم الحديث: ٨٢٩، ص: ٢١٠، قديمي

كتب خانہ)

(تذكرة الموضوعات لطاهر الفتني، باب الأذان ومسح العينين فيہ، ص: ٣٤، كتب

خانہ مجيدية، ملتان)

( النخبة البهيّة في الأحاديث المكذوبة على خير البرية،رقم الحديث: ٣١٦، ص: ١٧،

المكتب الإسلامي)

இதற்குப் பிறகு அல்லாமா சகாவி ( ரஹ்) அவர்கள் அல்லாமா ஷாமி அவர்கள் ஜர்ராஹின் சொல்லை எடுத்து சொல்கிறார்கள் இது சம்பந்தமான எந்த ஒரு மர்ஃபூவான ஹதீஸும் ஆதாரப்பூர்வமாக இல்லை. المقاصد) الحسنة، حرف الميم، رقم الحديث: ١٠١٩،ص: ٤٤٠، دارالكتب العلمية

حاشية ابن عابدين، كتاب الصلاة، باب الأذان: ٢/ ٦٢٨ ، دار الثقافة والتراث،

دِمَشق )

மகாஸிதுல் ஹஸனாவின் அடிக்குறிப்பில் தெளிவாக வந்துள்ளது.இது மட்டுமின்றி ஒட்டுமொத்தமாக அனைத்து மர்ஃபூவான ஹதீஸ்களும் ஆதாரப்பூர்வமானதாக இல்லை.அனைத்தும் இட்டுக்கட்டப்பட்டதாக அறிவிப்பாளர் தொடர்பின்றி உள்ளது. இதனின் அரபி வாசகம்: ولا يصح شيئٌ من هذا في المرفوع كما قال المؤلف، بل كلہ مختلق موضوع . "

( المقاصد الحسنة، حرف الميم، رقم الحديث: ١٠١٩،ص: ٤٤١،٤٤٠ )

சந்தேகமும் நிவர்த்தியும்:

இந்த ஹதீஸானது மர்ஃபூவாக நிரூபணமாகவில்லை எனினும் மவ்கூஃபாக ஸஹாபாக்களின் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது. நிரூபணமாகியுள்ளது.

எனவே இதனைக் கொண்டு அமல் செய்வது போதுமானது என்பதாக "மவ்லூஆதுல் கபீரில்" முல்லா அலி காரி ரஹ் அவர்கள் கூறுகிறார்கள் அதன் விவரம் பின்வருமாறு: قلت: وإذا ثبت رفعه على الصديق، فيكفي العمل به لقوله صلى الله عليه وسلم:

"عليكم بسنتي وسنة الخلفاء الراشدين ." (الموضوعات الكبرىٰ للقاري، حرف

الميم، رقم الحديث: ٨٢٩، ص: ٢١٠، قديمي كتب خانه)

கருத்து: இந்த ஹதீஸானது மர்ஃபூவாக அபூபக்கர் ( ரளி) வாயிலாக நிரூபணமானால் அதனைக் கொண்டு அமல் செய்வது போதுமாகிவிடும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:எனது சுன்னத்தையும் குலபாயே ராஷீதீன்களின் சுன்னத்தையும் பற்றிப்பிடியுங்கள் என கூறியுள்ளார்கள்.

நமது பதில்: *(1)* முல்லா அலி காரி (ரஹ்) அவர்கள், ஹள்ரத் அபூபக்கர் (ரளி) அவர்களின் பெருவிரல்களை முத்தமிடுதல் சம்பந்தமான அறிவிப்பை ஏற்பதாக பரலேவிகள் வாதிக்கின்றனர். அல்லாமா அவர்களின் வாசகத்திற்கு பரலேவிகள் செய்யும் பொருள்: அபூபக்கர் ( ரளி) அறிவிப்பு நிரூபணமாவது அமல் செய்வதற்கு போதுமானது என அர்த்தம் கொள்கின்றனர்.

இந்த வாசகத்திற்கு இவ்வாறு அர்த்தம் செய்வது அரபி மொழிக்கு எதிரானது.ஏனெனில் اذا ( இதா) என்பதானது ஷர்த்து எனும் நிபந்தனைக்காகவும் எதிர்காலத்தை குறிக்கும் அர்த்தத்தில் வரும்.اذا ( இதா) விற்கு பிறகு உள்ள இரு வாக்கியங்களிலும் எதிர்கால அர்த்தம் இருக்கும்.இதற்கு மாற்றமாக கொண்டு வந்தாலும் வெறும் வார்த்தையில் மட்டும்தான் மாற்றம் இருக்கும்.பொருள் எதிர்காலமாகதான் அமைந்திருக்கும்."தல்ஹீஸுல் மிஃப்தாஹின்" விரிவுரையிலே அல்லாமா தஃப்தாஜானி (ரஹ்) கூறுகிறார்கள்: لفظ اشارة الى ان الجملتين و ان جعلت كلتاهما او احداهما اسمية او فعلية ماضية فالمعنى على الاستقبال

கருத்து: ( اذا)வார்த்தையானது இரண்டு வாக்கியங்களின் பால் சுட்டிகாட்டக்கூடியது.இரண்டு வாக்கியங்களில் இரண்டையோ அல்லது ஒன்றையோ பெயர்ச்சொல்லாக அல்லது இறந்தகால வினையாக ஆக்கினாலும் அர்த்தமானது எதிர்காலமாகதான் அமையும். அல்லாமா முல்லா அலி காரி ( ரஹ்) அவர்களின் கூற்றிற்கு அரபிமொழி இலக்கண விதியின் படி சரியான பொருளானது அபூபக்கர் ரளி அவர்களின் அறிவிப்பானது மர்ஃபூவாக நிரூபணமானால் அமல் செய்வதற்கு

போதுமாகிவிடும்.எனவே எப்பொழுது மர்பூஃவாக நிரூபணமாகுமோ அப்பொழுதுதான் அதன்பேரில் அமல் செய்யமுடியும்.ஆக அபூபக்கர் ரளி அவர்கள் வரை மர்ஃபூவாக நிரூபணமாகவில்லை என்பதால் இதன் பேரில் அமல் செய்ய முடியாது. ( 2)ஒரு வாதத்திற்கு பரலேவிகளின் கருத்தை ஏற்றுக்கொண்டாலும் நமக்கு எதிரானது அல்ல. ஏனெனில் இந்த விஷயத்தில் அல்லாமா முல்லா அலிகாரி (ரஹ்) அவர்களுக்கு தவறான புரிதல் அல்லது தடுமாற்றம் ஏற்பட்டுள்ளது.இது போன்ற தடுமாற்றம் ஏற்படாத எந்த ஒரு மனிதரும் இருக்க முடியாது.

முக்கிய குறிப்பு: இமாம் அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) கூறுகிறார்கள் ومن ذا سلم من الوهم الا من عصمه الله تعالى لسان الميزان கருத்து: தடுமாற்றம் ஏற்படுவதிலிருந்து எவர்தான் தப்பிக்கமுடியும்.எனினும் அல்லாஹ்தஆலா பாதுகாத்தவரை தவிர (எவரும் தப்பிக்க முடியாது)

ஏனெனில் இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரானது நிரூபணமாகாத போது பிறகு எப்படி மவ்கூஃப் ஆதாரப்பூர்வமாகிவிட்டது என்பதாக கூறமுடியும்?

இதனின் அர்த்தம் என்ன?

முல்லா அலி காரி (ரஹ்) அவர்களின் கருத்தை குறித்து அல்லாமா அப்துல் பத்தாஹ் அபூ ஹத்தா அவர்கள் பதில் அளிக்கிறார்கள் : ومِن العجيب أن المؤلف لمّا نقل في الموضوعات الكبرىٰ قول السخاوي:

وأورده الشيخ أحمد الرّداد في كتابہ ‘‘: موجبات الرحمة ’’ بسند فيہ مجاهيل مع ”

، “ انقطاعہ عن الخضر عليہ السلام، وكل ما يروى في هٰذا، فلا يصح رفعہ البتة

تعقبہ بقولہ ‘‘: وإذا ثبت رفعہ إلىٰ الصديق، فيكفي العمل بہ لقولہ صلى اللہ عليہ

وسلم: ‘‘ عليكم بسنتي وسنة الخلفاء الراشدين ’’ ، فكان تعقبہ لا معنىٰ لہ إلا

الخطاء، إذ لم يصح إسناده إلىٰ أبي بكرٍ .’’ ( المصنوع في معرفة الحديث الموضوع،

رقم الحديث: ٣٠٠، ص: ١٦٩، ١٧٠،سعيد

கருத்து; ஆச்சரியமாக உள்ளது ( மேற்கூறப்பட்ட ஹதீஸ் சம்பந்தமாக) மவ்லூஆத் கபீரிலே அல்லாமா ஸகாவி ( ரஹ்) அவர்களின் சொல்லை எடுத்தெழுதியுள்ளார்கள்.இந்த ஹதீஸானது இட்டுக்கட்டப்பட்டது என நிரூபணமாகியுள்ளது.அவரே அதனை கூறிய பிறகு,

இந்த ஹதீஸ் மர்பூஃவாக அபூபக்கர் ( ரளி) வரை ஆதாரப்பூர்வமானது என நிரூபணமாகியுள்ளது. அமல் செய்வதற்கு போதுமானது என்பதாக சொல்வது

முன்னால் சொன்னதற்கு எதிராக உள்ளது.அர்த்தமில்லாமல் உள்ளது.அன்னாருக்கு தவறான புரிதல் ஏற்பட்டு விட்டது.

*(2)*ஹதீஸ்கலையில் மேற்கூறப்ட்ட அறிவிப்பின் அந்தஸ்து என்ன தரம் என்ன? என்பதை இனி பார்ப்போம்!

எவரேனும் பரலேவிகள் இந்த ஹதீஸ் ஆதாரப்பூர்வமானது இல்லை என்பதால் பலகீனமாகி விடாது ஏனெனில் ஸஹீஹ் ( ஆதாரப்பூர்வமானது) என்ற தரத்திற்கு பிறகு ஹஸன் என்ற ( ஏற்கத்தக்க) தரம் உள்ளது.எனவே ஹஸனான ஹதீஸைக் கொண்டு அமல் செய்யலாம் என வாதிட்டால் அவர்களுக்கு

நமது பதில்: இந்த வாதமானது அறவே ஏற்கத்தக்கதல்ல. முற்றிலும் பலகீனமானதாகும்.ஏனெனில் பலகீமான ஹதீஸ்கள் மட்டும் தொகுக்கப்பட்ட நூல்களில் அல்லது புனையப்பட்ட ஹதீஸ்களை இனம் காட்டும் நூல்களில் ஒரு ஹதீஸை குறித்து لا يصح (லா யஸிஹ்ஹு) ஆதாரப்பூர்வமானது அல்ல என கூறப்பட்டால் அதன் மூலம் அந்த ஹதீஸானது இட்டுகட்டப்பட்டது என்பது கருத்தாகும்.இது ஹஸன் என்ற ஏற்கதக்கதும் அல்ல. ளயீப் என்ற பலகீனமானதும் அல்ல.

இதனை குறித்து ஹதீஸ் கலை விதிகள் அடங்கியுள்ள நூல்களில் காணப்படுகிறது. இதனை குறித்து விவரம் قولهم في الحديث “: لا يصح ” ، أو “ لا يثبتُ ” صلى الله عليہ وسلم ونحو هٰذه

التعابير إذا قالوه في كتب الضعفاء أو الموضوعات، فالمراد بہ أن الحديث المذكور

موضوع، لا يتصف بشيئً من الصحة؛ وإذا قالوه في كتب أحاديث الأحكام،

فالمراد بہ نفي الصحة الاصطلاحية .” ( المصنوع في معرفة الحديث الموضوع،

ص: ٢٧، قديمي

கருத்து: ஹதீஸ்கலை வல்லுநனர்களின் لا يصح லா (யஸிஹ்ஹு) அல்லது لا يثبت ( லா யஸ்புது) என்பதான வார்த்தை பிரயோகமானது, 'பலகீமான ஹதீஸ்கள் மட்டும் தொகுக்கப்பட்ட நூல்களில் அல்லது புனையப்பட்ட ஹதீஸ்களை இனம் காட்டும் நூல்களில் புழங்கப்பட்டால்,

'அதனைக் கொண்டு கருத்தானது இட்டுகட்டப்பட்டது என்பதாகும்.ஆதாரப்பூர்வமான எந்த ஒரு தன்மையும் அதில் பெறப்படாது.இந்த வார்த்தைப் பிரயோகங்கள்,

சட்டங்கள் இடம்பெற்றுள்ள ஹதீஸ் நூல்களில் புழங்கப்பட்டால்,

அதனைக் கொண்டு கருத்தானது ஹதீஸ்கலையின் வழக்கத்தில் சரியானது என்பதை மறுப்பதாகும்.(எனினும் பலகீனமானது என்ற கருத்தில் இல்லை) (ஆதாரம் அல்மஸ்னூஃ ஃபி மஃரிஃபதில் ஹதீஸில் மவ்ளூஃ)

அல்லாமா ஜாஹிதுல் கவ்ஸரி ரஹ் அவர்கள் இதனை குறித்த ஹதீஸ் கலை விதிகளை விரிவாக எழுதியுள்ளார்கள் பலகீனமான ஹதீஸ்கள் மட்டும் தொகுக்கப்பட்ட நூல்களில் لا يصح லா யஸிஹ்ஹு என்று வந்தால் அதனைக் கொண்டு ஹஸன் ஏற்கத்தக்கது என்பது அர்த்தமில்லை. மாறாக அது باطل (பாதில்) வீணானது என்பதாகும்.” إن قول النقاد في الحديث : “ إنہ لا يصح ” بمعنیٰ أنہ باطل في كتب الضعفاء

والمتروكين، لا بمعنیٰ أنہ حسن، وإن لم يكن صحيحاً، كما نص علیٰ ذٰلک أهل

الشأن، بخلاف كتب الأحكام، كما أوضحت ذٰلک في مقدمة “انتقاد المغني ” .

( مقالات الكوثري، حول حديثين في حديث من أحاديث رمضان،ص: ۴۲،

دار السلام

கருத்து: ஹதீஸ்கலையில் அறிவிப்பாளர் தொடர்களை தரம்பிரிக்கும் ஆற்றல் பெற்ற

மார்க்க வல்லுனர்களின் لا يصح

(லா யஸிஹ்ஹு) என்ற வார்த்தை பிரயோகத்தின் கருத்தானது பாதில் (வீணானது) என்பதாகும்.

ஹதீஸ்கலை ஆய்வாளர்கள் தெளிவுப்படுத்தியதைப் போன்று ஆதாரப்பூர்வமானதாக இல்லையெனில் ஹஸன் ( ஏற்கத்தக்கது) அல்ல என்பதே அதனைக் கொண்டு கருத்தாகும்.இது அறிவிப்பாளர் தொடர்களில் பலகீனமானவர்கள், கைவிடப்பட்டவர்கள் குறித்த தொகுக்கப்பட்ட நூல்களைக் குறித்தாகும்.

எனினும் இதற்கு நேர்மாற்றமாக சட்டங்கள் இடம்பெற்றுள்ள ஹதீஸ் நூல்களில் அமைந்திருக்கும்.இதனைப் பற்றி இன்திகாதுல் முஃனியின் முன்னுரையில் நான் தெளிவுப்படுத்தியது போன்றாகும்.(ஆதாரம்: மகாலாதுல் கவ்ஸரி ஹவ்ல ஹதீஸைன் ஃபி ஹதீஸி மின் அஹாதீஸி ரமளான்)

*(معجم المصطلحات الحديثية)*

ஹதீஸ்கலை

வழக்கு சொற்கள் அகரவரிசைப்படி அமைந்துள்ள நூல்களில் இது சம்பந்தமான விரிவான விளக்கம் வந்துள்ளது

قولہ ‘‘: لا يصح .’’ هي لفظةٌ يستعملها المحدثون
للإخبار عن عدمِ ثبوت الحديث
في درجة الصحيح، فقولهم في الحديث: ‘‘ لا يصح ’’ ، أو ‘‘ لا يثبت ’’ ، أو ‘‘لم
يصح ’’ ، أو ‘‘لم يثبُت ’’ ، أو ‘‘ ليس بصحيحٍ ’’ ، أو ‘‘ ليس بثابتٍ ’’ ، أو ‘‘غيرُ ثابتٍ ’’ ، أو
لا يثبت فيہ شيئٌ ’’ ، ونحو هٰذه الألفاظ، إذ قالوها في كتب الضعفاء أو ”
الموضوعات؛ فمرادهم بها: أن الحديث المذكور موضوع، لا يتصف بشيئٍ من
الصحة .
وأما إذا قالوها في كتب أحاديث الأحكام؛ فمرادهم بها نفي الصحة الإصطلاحية؛
لأن فيها عدم صحة الحديث لا يلزم أن يكون موضوعاً . ( معجم المصطلاحات
الحديثية، حرف اللام، لا يصح، ص : ٤٤٣، مكتبة زمزم للطباعة والنشر والتوزيع،
كراتشي

கருத்து: லா யஸிஹ்ஹு ஆதாரப்பூர்வமானது அல்ல

என்ற வார்த்தையை 'ஹதீஸ்கலை வல்லுநர்கள்' ஆதாரப்பூர்வமான தரத்தில் ஹதீஸ் நிரூபணமாகவில்லை என்பதை கூறுவதற்காக பயன்படுத்துவார்கள்.

ஹதீஸ்களை குறித்து அவர்கள் ( லா யஸிஹ்ஹு) அல்லது ( லா யஸ்புது) அல்லது (லைஸ பி ஸஹீஹ்) அல்லது (லைஸ ஸாபித்) அல்லது (கைரு ஸாபித்) அல்லது (லா யஸ்புது ஃபீஹி ஷைஉன்) என்ற வார்த்தைகள்,

'இட்டுகட்டப்பட்ட ஹதீஸ்களை இனங்காண்பதற்கு தொகுக்கப்பட்ட நூல்களில் அல்லது பலகீனமான ஹதீஸ்களை மட்டும் தொகுக்கும் நூல்களில் பயன்படுத்துவார்கள் என்றால்' அவர்களிடத்தில் ஆதாரப்பூர்வமானது என்ற தன்மை எதுவும் பெறப்படாமல் இட்டுகட்டப்பட்டது என்பது கருத்தாகும்.

இந்த வார்த்தைப் பிரயோகங்கள்

'சட்டங்கள் இடம்பெற்றுள்ள ஹதீஸ் நூல்களில்' புழங்கப்பட்டால்

அதனைக் கொண்டு கருத்தானது ஹதீஸ்கலையின் வழக்கத்தில் சரியானது என்பதை மறுப்பதாகும்.இதனால் பலகீனமானது இட்டுக்கட்டப்பட்டது என்பதானது அவசியமாகாது.

அடுத்த அறிவிப்பு குறித்த ஆய்வு

ஹிள்ர் (அலை) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது.

அல்லாமா ஸகாவி ( ரஹ்), அல்லாமா தாஹிர் பத்னி ( ரஹ்), அல்லாமா முல்லா அலி காரி (ரஹ்) அனைவரும் இந்த அறிவிப்பின் அறிவிப்பாளர்கள் அதிகமானவர்கள் அறியப்படாதவர்கள் என்கிறார்கள்.

وكذا ماأورده أبو العباس أحمد بن أبي بكر الرّداد اليماني المتصوف في كتابہ

موجبات الرحمة وعزائم المغفرة " بسند فيہ مجاهيل مع انقطاعہ عن الخضر "

" . عليہ السلام أنہ: مَن قال حين سمع صلى اللہ عليہ وسلم ... إلخ

( المقاصد الحسنة للسخاوي، حرف الميم، رقم الحديث : ١٠١٩،ص : ٤٤١، دارالكتب

العلمية)

( الموضوعات الكبرىٰ للقاري، حرف الميم، رقم الحديث: ٨٢٩، ص: ٢١٠، قديمي

كتب خانہ)

(تذكرة الموضوعات لطاهر الفتني، باب الأذان ومسح العينين فيہ، ص: ٣٤، كتب

خانہ مجيديةملتان

கருத்து: இவ்வாறே அபுல் அப்பாஸ் அஹ்மத் இப்னு அபிபக்கர் ரிதாத் யமானி சூஃபி அவர்கள் தனது நூலான " மூஜிபாதிர் ரஹ்மா வ அஜாயிமில் மஃபிராவில்"

ஹிள்ர் ( அலை) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகிற ஹதீஸிலே அறிவிப்பாளர் தொடர் முறிவுடன், அறியப்படாதவர்களும் உள்ளனர் என்பதை குறிப்பிட்டுள்ளார்.(ஆதாரம் அல்மகாஸிதுல் ஹஸனா லிஸ்ஸஹாவி ஹர்ஃபுல் மீம், அல்மவ்ளூஆதுல் குப்ரா லில் காரி ஹர்ஃபுல் மீம், தத்கிரதுல் மவ்ளூஆத் லிதாஹிரில் ஃ பத்னி பாபுல் அதான் வ மஸஹுல் அய்னைனி ஃபீஹி) ஆக பெருவிரல்களை முத்தமிட்டு கண்களில் ஒற்றிக்கொள்ளுதல் சம்பந்தமான அறிவிப்புகள் அனைத்தும் இட்டுகட்டப்பட்டது.அடிப்படை ஆதாரமற்றது என்பதை ஆய்வுகளின் மூலம் நாம் புரியமுடிகிறது.

அல்லாமா ஷாமி (ரஹ்) அவர்கள்

இந்த மஸ்அலா மற்றும் ரிவாயத் குறித்த தகவலிற்கு ஆதாரமாக கன்ஜுல் இபாத், கஹஸ்தானி,

கிதாபுல் பிர்தவ்ஸ், பதாவா சூபிய்யா போன்ற நூல்களை குறிப்பிட்டு காட்டியுள்ளார்கள்.

அல்லாமா தஹ்தாவி (ரஹ்)

அவர்கள் கன்ஜுல் இபாத் மற்றும் பிர்தவ்ஸ் போன்ற நூல்களை ஆதாரமாக காட்டியுள்ளார்கள்.

ரூஹுல் பயானின் ஆசிரியர் அவர்கள் கஹஸ்தானி, குவ்வத்துல் குலூப் போன்ற நூல்களை ஆதாரமாக காட்டியுள்ளார்கள்.

ஆதாரமாக காட்டியுள்ள ஒட்டு மொத்த நூல்கள் அனைத்தும் ஏற்கத்தக்கவை அல்ல.மற்ற ஏற்கத்தக்க நம்பகமான நூல்களுக்கு ஏற்ப அமைந்திருக்கும் சட்டதிட்டங்கள் மட்டும் அங்கீகரிக்கப்படும்.

இதை குறித்த ஆய்வுகளை இனி காண்போம்!

முதலில் கன்ஜுல் இபாத் குறித்து பார்ப்போம்!

وكذا “ كنز العباد ” فإنہ مملوءٌ من المسائل الواهية والأحاديث الموضوعة، لا عبرةَ لہ، لا عند الفقہاء ولا عند المحدثين، قال علي القاري فيطبقات الحنفية: “ علي بن أحمد الغوري ...... ولہ “ كنز العبادفي شرح الأوراد ” ، قال العلامة جمال الدين المرشدي: فيہ أحاديث موضوعة لا يحل سماعها، انتهىٰ. ( النافع الكبير على الجامع الصغير، مقدمة الجامع الصغير، الفصل الأول في ذكر طبقات الفقہاء والكتب،ص: ٢٧، إدارة القرآن كراتشي

கருத்து: அல்லாமா அப்துல் ஹை லக்னவி (ரஹ் ) அவர்கள் கூறுகிறார்கள்:

இவ்வாறே கன்ஜுல் இபாத் நூலும் அமைந்துள்ளது. அதில் பலகீனமான சட்டதிட்டங்கள், ஏற்கத்தகாத இட்டுகட்டப்பட்ட ஹதீஸ்கள் நிறைந்து காணப்படுகிறது.ஹதீஸ்கலை வல்லுனர்களிடத்திலும் புகஹாக்கள் என்ற மார்க்க வல்லுனர்களிடத்திலும் அதற்கு எந்த ஒரு நம்பகத்தன்மையும் இல்லை.

அல்லாமா முல்லா அலி காரி (ரஹ்) அவர்கள் "தபகாதுல் ஹனஃபிய்யாவில்" கூறுகிறார்கள்:

அலி இப்னு அஹ்மத் நைவ்ரி அவர்களின் நூலான " கன்ஜுல் இபாத் ஃ பீ ஷர்ஹில் அவ்ராத்தை" பற்றி அல்லாமா ஜமாலுத்தீன் முர்ஷிதி கூறுகிறார்கள்:

அதிலே உள்ள இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களை செவியேற்பதற்கு அனுமதியில்லை. (ஆதாரம்:நாஃபிஉல் கபீர் அலா ஜாமிஉஸ்ஸஙீர்)

இரண்டாவதாக பதாவா சூஃபிய்யாவை குறித்து பார்ப்போம்!

அல்லாமா அப்துல் ஹை லக்னவி (ரஹ்) அவர்கள், ஹாஜி கலீபா, அல்லாமா ஜர்கலி கூறுகிறார்கள்: الفتاویٰ الصوفية في طريق البهائية ” لفضل اللّٰہ محمد بن أيوب المنتسب إلیٰ

ماجو . قال صاحب كشف الظنون: قال المولیٰ البركلي: الفتاویٰ الصوفية ليست

” . من الكتب المعتبرة، فلا يجوز العمل بما فيها إلا إذا علم موافقتها للأصول

( كشف الظنون عن أسامي الكتب والفنون، حرف الفاء: ٢/ ١٢٢٥ ،دار إحياء التراث

العربي، بيروت)

)( الأعلام للزركلي، الماجورى: ٦ / ٤٧ ، دار العلم للملايين، بيروت

( النافع الكبير على الجامع الصغير، مقدمة الجامع الصغير، الفصل الأول في ذكر

طبقات الفقہاء والكتب،ص : ٢٧، إدارة القرآن كراتشي

கருத்து: பதாவா சூபிய்யா ஃபீ தரீகில் பஹாயிய்யா என்ற நூலின் ஆசிரியர் ஃபள்லுல்லாஹ் முஹம்மத் இப்னு அய்யூப்பிற்குரியது.

கஷ்பு ளுனூனின் ஆசிரியர்,

அல்மவ்லா அல்பர்கலி கூறியதை எடுத்துகாட்டுகிறார்: பதாவா சூபிய்யா நம்பகமான நூல்களில் உள்ளடங்கியதல்ல.அதிலே இருப்பதை அமல் செய்வது கூடாது எனினும் அடிப்படையான நூல்களுக்கு தோதுவாக இருப்பதை அறியப்பட்டால் அமல் செய்யலாம்.(ஆதாரம் கஷ்ஃபுள்ளுனூன் அன் அஸாமில் குதுப் வல் புனூன்)

மூன்றாவதாக பதாவா கஹஸ்தானி குறித்து இனி காண்போம்!

وقال المولیٰ عصام الدين في حق القہستاني : “ إنہ صلى الله عليہ وسلم... لا

يعرف الفقہَ ولا غيرَه بين أقرانہ ويؤيده أنہ يجمع في شرحہ ھٰذا بين الغث

والسمين، والصحيح والضعيف من غير تصحيح ولا تدقيق، فهو كحاطب الليل

” . جامع بين الرطب واليابس في النيل، وهو العوارض في ذم الروافض، إلخ

( النافع الكبير على الجامع الصغير، مقدمة الجامع الصغير، الفصل الأول في ذكر

(طبقات الفقهاء والكتب،ص : ٢٧، إدارة القرآن كراتشي

قہستانی ” کے بارے میں علامہ شامی رحمہ اللہ فرماتے ہیں ”:

والقهستاني ” كجارف سيل وحاطب ليل. ( تنقيح فتاوىٰ الحامدية، كتاب الحظر ”

والإباحة: ٢/ ٣٥٦ ، حقانية. وكذا في عمدة الرعايةعلى شرح الوقاية، ص: ١٠، مكتبة

إمدادية، ملتان )

கருத்து: கஹஸ்தானியின் நூலான ஜாமிஉ ருமூஜ் ( جامع الرموز) இவரின் முழுமையான பெயர் ஷம்சுத்தீன் முஹம்மத் குராஸானி கஹஸ்தானி அவர்கள் இந்த மஸ்அலாவை கன்ஜுல் இபாதிலிருந்து எடுத்தெழுதியுள்ளார்கள்.

அல்லாமா இஸாமுத்தீன் (ரஹ்) அவர்கள்

இவரை (கஹஸ்தானியை) குறித்து கூறுகிறார்கள்:

இவர் அக்காலத்தில் நூல்களை விற்றுக்கொண்டிருந்தார்.இவர் அக்கால உலமாக்களிடத்தில் மார்க்கதுறையில் பிரபல்யமானவரோ, அறியப்பட்டவரோ அல்ல.இதனை உறுதிப்படுத்தும் விஷயங்களில் இவரின் நூலில் உள்ளது.சரியான, தவறான, பலகீனமான விஷயங்களை ஆய்வின்றி பிரித்தறியாமல் அனைத்தையும் எடுத்தெழுதிவிடுவார்கள்.

கஹஸ்தானி (ரஹ்) அவர்களை குறித்து

அல்லாமா ஷாமி ( ரஹ்) கூறுகிறார்கள்: ஆய்வு செய்த செய்யாத அனைத்தையும் ஒன்று சேர்ப்பார்.جارف سيل (ஜாரி.்.பு ஸைய்ல்) என்பதன் அர்த்தம் வெள்ளமானது தன்னுடன் எதையும் பிரித்தறியாமல் எல்லாவற்றையும் அடித்து செல்லுமோ அதற்கு சொல்லப்படும்.இவ்வாறுதான் கஹஸ்தானி (ரஹ்) அவர்களும் அவரது நூலிலே ஏற்கத்தக்க ஏற்கத்தகாத அனைத்து மஸாயில்களையும் ஒன்று சேர்ப்பார்கள்.حاطب ليل ( ஹாதிபு லைல்) என்பதன் அர்த்தம் ஒரு நபர் இரவின் இருளில் சுள்ளிகளை பொறுக்கும்போது எந்த விதமான சுள்ளிகளை பொறுக்குகிறோம் என்பது தெரியாது.

இவ்வாறுதான் கஹஸ்தானி ( ரஹ்) அவர்களும் அவரது நூலில் அனைத்து மஸ்அலாக்களையும் ஒன்று சேர்த்துள்ளார்கள்.அதனை எவ்வாறு ஒன்று சேர்த்தார்கள் என்பது யாருக்கும் தெரியாது.

அடுத்து ஒரு கேள்வியும் அதற்கு நமது பதிலும்:

தஹ்தாவி ( ரஹ்) அவர்கள் இந்த மஸ்அலா குறித்து بمثله يعمل فى الفضائل இது போன்ற ஹதீஸ்களைக் கொண்டு அமல் செய்யலாம் என்கிறார்கள். இதற்கு பதில் என்ன?

நமது பதில்:தஹ்தாவி ( ரஹ்) அவர்கள் இந்த விஷயத்தை எந்த முஹத்திஸிடமிருந்தும் எடுத்து சொல்லவில்லை.அந்த ஹதீஸ்களின் தரத்தைப் பற்றி தெளிவுப்படுத்தவுமில்லை.மாறாக மர்பூ ஃவாக அபூபக்கர் (ரளி) வாயிலாக மற்றும் ஹிள்ர் ( அலை) அவர்களின் வாயிலாக வந்துள்ளது.பலகீனமான ஹதீஸ்கள் அனைத்தையும் அமல் செய்யமுடியாது.அதற்கென சில விதிகள் உள்ளன.இனி அதனை காண்போம்! காளி இப்னுல் அரபி மாலிகி ரஹ் அவர்கள் பலகீனமான ஹதீஸ்கள் சம்பந்தமாக கூறுகிறார்கள் : لا يعمل به مطلقا

கருத்து: அதனைக் கொண்டு பொதுவாக அமல் செய்யப்படாது.

இமாம் இப்னு தகீக் ஈத் ரஹ் அவர்கள் கூறுகிறார்கள் :العمل با الحديث الضعيف مقيد بشروط

கருத்து:பலகீனமான ஹதீஸ்களை கொண்டு அமல் செய்வது என்பது நிபந்தனைகளுடன் இணைந்துள்ளது.

"ஆஸாருல் மர்ஃபூஆ ஃபில் அஹ்பாரில் மர்ஃபூஆ" என்ற நூலில் வருகிறது اما العمل بالضعيف فى فضائل الاعمال فدعوى الاتفاق فيه باطلة نعم هو مذهب الجمهور لكنه مشروط بالان لا يكون الحديث ضعفا شديدا الضعف فان كان كذلك لم يقبل فى الفضائل ايضا (الآثار المرفوعة فى الاخبار المرفوعة)

கருத்து : அமல்கள் சிறப்புகளிலே பலகீனமான ஹதீஸைக் கொண்டு அமல்செய்யலாம் என்பதில் அனைவரும் ஒன்றுப்பட்டுள்ளனர் என்கிற வாதம் தவறானது.அமல் செய்யலாம் என்பது பெரும்பான்மையான உலமாக்களின் கருத்தாகும்.எனினும் அதற்கென்று நிபந்தனைகள் உள்ளது.கடுமையான பலகீனம் இருக்ககூடாது.இவ்வாறு இருந்தால் சிறப்புகளிலும் அமல்செய்யக்கூடாது.

பலகீனமான ஹதீஸ்களை அமல் செய்வதற்கு நிபந்தனைகள் ذكر شيخ الاسلام له ثلاث شروط احدها ان يكون الضعيف غير شديد الضعيف فيحترز من الكذابين و المتهمين بالكذب ومن فحش غلطه و الثاني ان يندرج تحت اصول معمول به و الثالث ان لا يقصد عند العمل به ثبوته بل يعتقد الاحتياط

கருத்து: ஹாபிள் இப்னு ஹஜர் ( ரஹ்) அவர்கள் பலகீனமான ஹதீஸ்கள் அமல் செய்வதற்கு மூன்று நிபந்தனைகள் அதில்

முதலாவது பலகீனமானது கடுமையாக இருக்ககூடாது பொய்யர்கள்,இட்டுகட்டுபவர்கள் மோசமான தவறுகள் இதிலிருந்து நீங்கி இருக்க வேண்டும்.

இரண்டாவது நிபந்தனை அமல் செய்யப்படும் அடிப்படைக்கு கீழ் உள்ளடங்கி இருக்க வேண்டும். மூன்றாவது நிபந்தனை நபியிடமிருந்து நிரூபணமானது என்பதாக எண்ணாமல் பேணுதல் பேரில் அமல் செய்வதாக எண்ணவேண்டும்.

يجوز و يستحب العمل فى الفضائل و الترغيب و الترهيب بالحديث الضعيف ما لم يكن موضوعا

கருத்து:அமல்கள் சிறப்புகளில் ஆர்வமூட்டுவதற்கு எச்சரிக்கை செய்வதற்கு பலமான ஹதீஸைக் கொண்டு அமல் செய்வது முஸ்தஹப்பாகும்.கூடும்.எனினும் புனைந்துரைக்கப்படாக இருக்ககூடாது.

தஹ்தாவி ( ரஹ்) அவர்களின் கருத்துப்படி பலகீனமான இது போன்ற ஹதீஸ்களைக் கொண்டு அமல்செய்யலாம் என்பதானது இந்த மஸ்அலாவிற்கு பொருந்தாது.ஏனெனில் தஹ்தாவி ( ரஹ்)அவர்கள் இதனை எந்த ஹதீஸ்கலை வல்லுனரிடமிருந்து எடுத்து சொல்லவில்லை.எனினும் அல்லாமா இப்னு ஹஜர் ( ரஹ்) ஸகாவி ( ரஹ்) அல்லாமா ஸுயூத்தி ரஹ் அப்துல்ஹை லக்னவி ரஹ் கருத்துப்படி இந்த ஹதீஸின் பேரில் அமல் செய்யமுடியாது.பலகீனமான ஹதீஸ்களை ஏற்பதற்கு மூன்று நிபந்தனைகள் உள்ளன.இந்த மஸ்அலாவில் எந்த ஒரு நிபந்தனையும் பெறப்படவில்லை.இதுமட்டுமின்றி அல்லாமா முஹம்மது தாகிர் குஜராத்தி முல்லா அலி காரி இரு பெரும் மேதைகளும் தங்களது மவ்ளூஆத் நூல்களில் இந்த ஹதீஸ் மவ்ளூஃ இல்லை என்பதை நிராகரிக்கவில்லை.இருவரும் ஹதீஸ்துறையில் தஹ்தாவி (ரஹ்)

விட உயர்ந்தவர்கள்.இருவரும் ஹதீஸ் துறையில் நூல்களை எழுதியுள்ளனர்.ஆனால் இமாம் தஹ்தாவி ( ரஹ்) அவர்கள் ஹதீஸ் துறையில் எந்த ஒரு நூலும் எழுதவில்லை.காலத்தால் முந்தியவர்களுக்கு முன்னுரிமை கொடுக்கவேண்டும் என்றாலும் இருவரும் தஹ்தாவி (ரஹ்)

அவர்களை விட காலத்தால் முந்தியவர்கள்.ஏனெனில் முஹம்மத் தாகிர் குஜராத்தி *10*ம் நூற்றாண்டு முல்லா அலி காரி (ரஹ்)

அவர்கள் *11*ம் நூற்றாண்டு இறுதியில் மரணித்தார்கள்.அல்லாமா தஹ்தாவி (ரஹ்) அவர்கள் *12*ம் நடுவில் அல்லது இறுதியில் மரணித்தார்கள்.இதனை ஷாமி (ரஹ்)

அவர்களின் நூல்களில் அறியமுடியும்.

அல்லாமா ஷாமி (ரஹ்)

அவர்களின் கருத்தின் உண்மைநிலை: இந்த மஸ்அலாவை குறித்து அல்லாமா ஷாமி (ரஹ்) அவர்கள் எடுத்தெழுதியுள்ளார்கள்:

இதனை அன்னார் அவர்கள் கஹஸ்தானி ( ரஹ்) அவர்களிடமிருந்து எடுத்தெழுதியிருப்பதன் மூலம் இதனின் அடிப்படை கஹஸ்தானி ( ரஹ்) அவர்கள்தான் என்பதை புரியமுடிகிறது.அல்லாமா ஷாமி ( ரஹ்) அவர்கள் "உகூது ரஸ்மில் முஃப்தி" என்ற நூலில் கஹஸ்தானி ( ரஹ்) அவர்கள் ஏற்கத்தகுந்தவர் இல்லை என்பதாக முன்பாக நாம் தெளிவுப்படுத்திவிட்டோம்.அன்னார் இந்த மஸ்அலாவை வலுப்படுத்தும் ஆதாரங்களை வேறு நம்பகத்தகுந்த கிரந்தங்களிலிருந்து நிரூபித்திருந்தால் சந்தேகமின்றி வலுவான ஆதாரமாக அமைந்திருக்கும்.அன்னார் இந்த மஸ்அலாவைப் பற்றி கூறிய பிறகு தைலமியின் பிர்தவ்ஸின் அறிவிப்பானது ஆதாரப்பூர்வமானது இல்லை என்பதை அல்லாமா ஜர்ராஹி (ரஹ்)அவர்களின் சொல்லை எடுத்தெழுதி மறுக்கவில்லை.மௌனமாக இருந்தார்கள்.எனவே உண்மையில் ஷாமி ரஹ் அவர்களிடத்திலும் முஸ்தஹப்பு இல்லை என்பதைதான் புரியமுடிகிறது.

இறுதியாக பரலேவிகள் இந்த மஸ்அலாவை நிரூபிக்க பைபிளை ஆதாரம் எடுத்துள்ளார்கள்.(ஆதாரம் மிக்யாஸ் ஹனஃபிய்யத்)